# சமையல் சாமா

**வ.ரா.**

'படைக்குப் பிந்திக் கொள்; பந்திக்கு முந்திக் கொள்' என்ற ஆவலுடன் சொல்லுகிறார்கள். சோற்றுக்கு முந்திக் கொள்பவர்கள் சண்டை சமயத்தில் தூங்காமல் என்ன செய்வார்கள்? படை - பந்தி பழமொழி எப்பொழுது பிறந்தது என்று சொல்ல முடியாது ஆனால் அது பிறந்த பின் சமையலுக்கு அதிகமான பெருமை ஏற்பட்டு விட்டது என்பது உறுதி.

தேசீயம் வலுக்க வலுக்க, சர்க்காரின் பட்டங்கள் எப்ப மலிவாகப் போய்விட்டனவோ, அது போலவே, மேற்சொன்ன பழமொழிக்கு அகண்டமான பிரசாரம் ஏற்பட்ட ஏற்பட, சமைய சாமாக்கள் மலிந்து போனார்களே யொழிய, அவர்கள் கை கொண்ட தொழிலின் பெருமை பெருகிக் கொண்டே வருகிறது.

சமையல் சாமா அந்த 'லய'னில் பக்காப் பேர்வழி. சமதர்ம கொள்கையும் பொதுவுடைமை வழியும் உயிர் நாடிகளாக பாவிக்கப்படும் இந் நாளிலே சாமா பெரிய கனவான் என்றுதான் நான் சொல்லியிருக்க வேண்டும். அன்பு ஊற்று வற்ற வற்ற, கட்சி களும் கொள்கைகளும் புதிது புதிதாய்த் தோன்றுகின்றன. அன்பை அடிப்படையாகக் கொள்ளாத எந்தத் திட்டமும் நீடித்திருக்காது என்றால், வேதாந்தம் என்பார்கள் விரைவிலே.

எனக்குச் சாமாவினிடம் அன்பு இருக்கிற அளவு, மதிப் இருக்கிற அளவு, ஏனையோருக்கும் இருந்தால் போதும் என்ற கூடச் சொல்லப் பயமாயிருக்கிறது. பேச்சு சுதந்திரம் வேண்டு என்று வாய் சலிக்காமல் கூச்சல் போடும் மனிதர்கள், பிறருக்கு அந்தச் சுதந்திரத்தை மனம் ஒப்பிக் கொடுப்பதில்லை. அற்புதத் தைப் பார்க்க எண்ணிப் புராணத்தைப் படிக்கிறார்களே, வாழ்க் கையில் தற்போது நேர்ந்திருக்கும் பேச்சுச் சுதந்திரப் பறிமுதல் அற்புதத்தை நேரே கண்ணால் பார்க்கக்கூடாதா?

சாமாவுக்கு இப்பொழுது ஐம்பது வயதிருக்கும். எனக்கு வயதில் பெரியவர் சாமா. என்றாலும் 'அண்ணா' என்று என்னை

அழைப்பதில் அவர் வாய் நேர்த்தி ஒரு பொழுதும் குலைந்ததே யில்லை. சாமாவுக்கு இப்பொழுது எங்கே பார்த்தாலும் கீர்த்தி. கற்றோர்க்குச் சென்ற விடமெல்லாம் கருப்பு (பஞ்சம்). சாமாவுக்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு. அவன் ஜன்மம் எடுத்த லக்னம் என்கிறாள் குப்பிப் பாட்டி. அது எனக்குத் தெரியாது.

சாமா தனது அடிநாள் கதையை என்னிடம் சொல்லுவதுண்டு. அதிலே, எனக்கு நினைவிருக்கிறதைச் சொல்லுகிறேன். சாமா சொல்லுகிறார்: 'அண்ணா, நான் அடி நாளில் கஷ்டப்பட்டதைச் சொன்னால் நீங்கள் கூடச் சிரிப்பீர்கள். ''நாலு எழுத்துத் தெரிந்து கொள்ளாமல், கரண்டியைக் கையில் எடுத்துவிட்டான் பார்!'' என்று எல்லோரும் ஏசினார்கள். எனக்கு அவமானம்.

'எனக்குச் சாப்பாட்டிலே கொஞ்சம் நாக்கு ஜாஸ்தி. அதற்காக என் நாக்கை அறுத்து விடுகிறதா? அதிகப் பிரசங்கிகளின் நாக்குகள் கூட அறுபடுகிறதில்லையே! நான் நன்றாகச் சாப்பிடுவது என் பாட்டி கண்ணில் குற்றமாகப் பட்டது. ''பெரு வயிறு படைத் தவன்'' என்று இந்த தேசத்திலேதான் ஏச்சும், பேச்சும். ஏன், அண்ணா! நன்றாய்ச் சாப்பிடாவிட்டால், ஒருவன் எந்த வேலை யைத் திடமாய்ச் செய்ய முடியும்?

'என்னோடு ஒருத்தன் படித்தான். அவனுக்குத் தாசில் வேலை ஆகிவிட்டது. அவனுக்குத் தாசில் வேலையானால் எனக்கு என்ன? அப்பா! ஊரிலே என்னைத் தொளைத்து விட்டார்கள். ஒரு ஏர் மாட்டிலே ஒன்று சொத்தை யென்று என்னைப் பார்த்துக் கேலி செய்தார்கள். ஆனால் வேடிக்கையைப் பாருங்கள். அவன் ஏதோ ஆபீசிலே தப்புச் செய்து விட்டான். ஜெயிலுக்குத்தான் போகிறது பாக்கி. வீட்டிலே வந்து பேன் பார்த்துக் கொண்டிருக்கிறான். அவனுக்கு வேலை போன பிறகுதான், நான் ஊரிலே தலை நிமிர்ந்து நடக்க முடிந்தது.

'நான் சமையல் வெங்கிட்டு கையில் தயாரானவன். வெங்கிட்டு என்றால் லேசுப் பேர்வழியா? சமையல் பாத்திரங்க ளெல்லாம் அவன் சொல்லுகிறபடி அலறும். அவன் கைராசியோ என்னவோ, ஈரக் கட்டையை அடுப்பிலே வைத்தாலும் அது ''கணகண'' வென்று கொழுந்து விட்டு எரியும். பத்து மணிக்குப் பந்தி பரிமாறணும் என்று சொன்னால் ''டாண்'' என்று குண்டு போட்டால் போலத் தயார் பண்ணிவிடுவான். யாருக்கும் சமையல் தெரிந்ததாகவே வெங்கிட்டு ஒப்புக் கொள்ள மாட்டான். என் ஒண்டி கிட்டத்தான் அவனுக்குப் பயம்.'

'என்ன அண்ணா! மிளகுக் குழம்பு என்றால் மூன்று மைல் தூரத்துக்கு வாசனை வீச வேண்டும். ''யாரு, சாமா சமையலா?'' என்று எல்லோரும் கேட்க வேண்டும். வயிற்று வலிக்காரன்கூட, ஒரு சிப்பல் சாதம் கூடச் சாப்பிட வேண்டும். சமையல் என்றால் ஏன் என்று கேட்க வேண்டாமா? கரண்டி எடுத்தவனெல்லாம் சமையற்காரனாகி விட முடியுமா? அண்ணா, எல்லாருந்தான் பேசறா! காந்தி மகாத்மாவும்தான் பிரசங்கம் செய்கிறார்!'

சமையலில் சாமா மகாத்மாவைப் போல என்று சொல்லும் பொழுது எனக்குச் சிரிப்பு வந்தது. சாமா சொல்லுகிறார்: 'நன்னாச் சிரியுங்க, அண்ணா! ஒவ்வொரு வேலையிலும் எக்ஸ்பர்ட்டுக்குத் தானே மகாத்மா என்று பெயர்? இந்தத் தந்தியைப் பாருங்கோ! இது எங்கிருந்து வந்திருக்கிறது? சென்னைப் பட்டணத்திலிருந்து வந்திருக்கிறது. பட்டணத்திலிருந்து என்னைக் கூப்பிடறதுன்னா லேசா? நான் டம்பமாய்ச் சொல்லுகிறேன் என்று நினைக்கக் கூடாது. ஒன்றும் அதிகமாய் வேண்டாம். ஒரு நாளைக்கு என் கையாலே ரஸம் சாதம், சட்டினி பண்ணிப் போடுகிறேன், சாப்பிட்டுப் பாருங்கள்.'

சாமா அழுத்தமாகச் சொல்லச் சொல்ல எனக்கு ஆனந்தம். எக்ஸ்பர்ட் (நிபுணன்) பேச்சு அழுத்தமாகத்தான் வரும், விழும். 'அதிருக்கட்டும், சாமா! நீர் கலியாண வீட்டில் பெண்களுக்கு நடுவே எப்படி நிர்வாகம் செய்கிறீர்? அவர்கள் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லுவார்களே!' என்றேன்.

சாமா சிரித்துக் கொண்டு சொல்லுகிறார்: 'அண்ணா! ரொம்பவும் இனிப்பான கேள்விதான். கலியாண காலத்தில் பெண்கள் ரொம்பத்தான் கொட்டம் அடிக்கிறார்கள். வாஸ்தவந்தான். ஆனால் ஒரு சூட்சுமம் இருக்கிறது. அவர்கள் சொல்லுகிறதைக் கேட்கவும் படாது, கேட்காமல் இருக்கவும் படாது. அவர்கள் சமையல் கட்டுக்கு வராமல் நெளிவாய்ப் பார்த்துக் கொள்ள வேண்டும். ''பாவமே! நல்ல புடவையில் எண்ணெய் பட்டுப் போய்விட்டதே!'' என்றால், ஒரு குஞ்சுகூட அங்கே வராது. இல்லாவிட்டால், ''அம்மா, அதற்கு உப்புப் போறுமா பாருங்கள்,'' என்றால், ஓட்டம் எடுத்து விடு வார்கள். ''புருஷாள் வரமாட்டா, பாருங்கோ!'' என்றால் போதும்.

'கிழவிகள் தொண தொண வென்று பேசிக் கொண்டிருப் பதைத்தான் தடுப்பது கஷ்டம். ஆனால், அவர்களுக்கெல்லாம் ருசியாய் ஏதாவது செய்து கொடுத்துவிட்டால், வாயடைத்துப் போய்விடும். நாம் கையிலே கொண்டு போகிற பண்டம்

நஷ்டப்பட்டுப் போய்விடுகிறதா? எல்லாம் அவர்களுடைய சாமான்கள்தானே?

'சமையல்காரனுக்குப் பெண்ணைக் கொடுக்கவாவது என்று என் மாமனார் கொழித்துக் கொழித்துப் பேசினார். இப்போ என்ன செய்கிறது? என் பிள்ளை சுந்தரத்துக்கு ஹைகோர்ட்டு வக்கீல்... அவர் பெண்ணைத்தானே கொடுத்திருக்கிறது. இப்போ, மாமனாருக்குத் தலை கால் தெரியவில்லை. எங்கள் வீட்டுக்கு வந்தால், ஆறு மாதத்துக்குக் குறைந்து போவதில்லை. எல்லாம் காலதேச வர்த்தமானம், அண்ணா!'

சாமா தம்மைப் பற்றிச் சொன்னது ஒருபுறம் இருக்கட்டும். எந்தப் பெரிய டீ பார்ட்டியிலும் அவர் இல்லாமலிருப்பதில்லை. செட்டாகப் பரிமாறுவதில் 'கொம்பன்'. 'அய்யர்வாளுக்கு அதிகமாக வைத்தால் கோபம் வரும்'. 'டில்லியிலே முதலியார் சாப்பிடாத பட்சண வகைகளா? நம்ம ஊர்ப் பண்டமா அவருக்குப் பிடிக்கும்?' என்று சொல்லி, பிளேட்டில் கொஞ்சம்தான் வைப்பார். சாமா ஏய்க்கிறார் என்று தெரியும். ஆனால் அவர் சொல்லும் இங்கித வகையிலே எல்லோரும் ஈடுபட்டுச், சிரித்து விடுவார்கள்.

சாமா வேறு முறையில் பெருமை பேசிக் கொள்ளுவார். 'இந்த நாளிலே சர்க்கார் உத்தியோகம் சாசுவதமுமல்ல, உயர்ந்ததுமல்ல. அதிலே லீவும் கிடைக்காது. சம்பளமும் உயராது. மேலேயிருப்பவன் சாவதற்குக் கீழே யிருப்பவன் ஜபம் பண்ணிக் கொண்டிருக்கணும். சமையல் உத்தியோகமா, ராஜாங்கம்! வேணுமென்றால் வேண்டும்; இல்லையென்றால் வேண்டாம். யார் கேட்கிறது? சமையல்காரனை அலட்சியம் செய்ய யாருக்கு இப்பொழுது நெஞ்சிலே தைரியம் இருக்கிறது, கையிலே வலு இருக்கிறது?' என்பார் சாமா.

'நள பாகம் என்கிறார்களே, நளன் பீமசேனன் எல்லோரும் எங்கள் வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். நாங்கள் எல்லாருக்கும் அமுது படைக்கும் சின்ன ஆண்டவன்கள். கை நிறையப் பரிமாற வேண்டும்; கள்ளமில்லாமல் வேலை செய்ய வேண்டும். பெண்களை நிமிர்ந்து பார்க்கப்படாது. இப்படி யிருந்தால் பெரிய பணக்காரன் வீட்டுக் கலியாணச் சீட்டுக் கச்சேரியிலும் சமமாக உட்கார்ந்து கொள்ளலாம்!' என்பார் சாமா.

**- 1934**